உ

குமரன்றுணை :

முருகர்

# திருப்பதிகம்.

இஃது

சேலம் ஜில்லா திருச்செங்கோடு தாலூக்கா

சேர்வாம்பட்டி நகரில்வசிக்கும்

ம-ா-ா-ஸ்ரீ

பழநிவேலக்கவுண்ட ரவர்கள்குமாரர்

ம-ா-ா-ஸ்ரீ

காளிபண்ண கவுண்டரவர்களா

லியற்றப்பட்டு

உடுமலைப்பேட்டையி லிருக்கும்

எம். ஆர். கந்தசாமிக் கவிராயர்

அவர்களால்.



உடுமலைப்பேட்டை

"வித்தியாரக்ஷணி" அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1896.

IMS0071



உ

குமரன்றுணை

முருகர்

# திருப்பதிகம்.

காப்பு.

சாதலித்துக் கந்தன் கழல்போற்ற வென் றனது
தீதறுத்துப் பேரின்பந் தித்திக்கப்-போதிக்கும்
தந்திநிற மால்மருகன் சங்கரனார் தந்தருளும்
தந்திமுகத் தோன்பதமே தான்.

## நூல்.

பாடும் படியருள் செந்தமிழ் நாவல பன்னிருகை
கூடுங் குமர முருகா வுனது குலப் பதத்தைத்
தேடும் படியெனக் கெந்நே ரமுமதி தேக்கிவைக்க
ஆடுங் களிமயின் மேல்வரு வாயென் னரும்பொருளே. (க)

அரும்பொரு ளேயென தாருயி ரேநல் லடியர்நெஞ்சில்
வரும்பொரு ளேதெய்வ குஞ்சரி வள்ளி மனமகிழும்
பரம்பொரு ளேபண் ணவனு முனிக்கும் பரமனுக்கும்
வரம்பொரு ளன்றுப தேசித்த வாவருள் வானவனே. (உ)

ஆண்டவ னேயடி யேனுளமன்றி லமர்ந்து தினந்
தாண்டவஞ் செய்திடுஞ் சண்முக னேநின் றயவடியேன்
வேண்டிடும் வேளையில்வந்தருள் வாய்விண் ணவர்சிறைமீட்
டாண்டிடுங் காவல னேயடி யார்களுக் காருயிரே. (ங)

ஆறுமுகமு மயில்தாங்கு கையு மணிநுதல் சேர்
நீறுந் துலங்கவென் முன்வந்தி யான்வஞ்ச நெஞ்சரிடம்
விறுண்டெனச்செல்லும்வேளையிற் சென்மவினையையெல்லாம்
கூறிடும் வேலிற் குமைப்பாய் பரம குருமணியே (ச)

தனிமுத லீன்றருள் தந்திக் கிளைய தனிமுதலே
கனிவாக நெஞ்சங் கருதிக் கதிதனைக் காணலின்றி
யனியாய மாக வலைந்தே யயர்ந்த வடியனை நீ
முனியாமல்வந்து கருணைசெய் தாண்டருள் முன்னவனே. (ரு)

குஞ்சரி வள்ளி மகிழுங் குமர குருபரனே
அஞ்சலி செய்துள மானந்த மேவி யடியிணையே
தஞ்சமென் றேத்து மடியேனுக் குன்றன் றயவருள்வாய்
வஞ்சனைச் சூரிருள் போக்கி யொளிதிகழ் மாணிக்கமே. (௬)

ஆதர வின்றி யடியே னலைந்துள் ளயர்ந்து நித்தங்
காதல் பெருகினன் கந்தா நினது கழல்பணியப்
போகித் தருள்செய் புரவல னேயிப் புவியிலென்பாற்
சாதனை செய்தல் தகுமோ பரம தயாநிதியே. (௭)

சண்முக நாத சரணஞ் சரணந் தனிமுதலே
தண்ணங் கமலத் தயனைச் சிறைசெய்த தத்துவனே
கண்ணுத லோனுக் குபதேசஞ் செய்தநின் கான்மலரை
யெண்ணும் படிக்குக் கருணைசெய்வாயென் னிறையவனே (௮)

காவெனை யென்று கதறிய வேளையிற கந்தன் மகிழ்ந்
தாவல் பெருகியஞ் சேலென்று வந்தென் னசமுருகிப்
பாவிசை பாடும் படியருள் செய்தனன் பத்தரெண்ணிக்
கூவுமுன் மேவி யருள்வான் குமர குருபரனே. (௯)

குருபர னேயென்று கூவியென்னெஞ்சங் குழையுமுன்பு
வருமுரு காவென்றன் வல்வினை தீர்த்தனை வாழ்த்திமனம்
உருகும் படியருள் செய்வாய் கடம்பணி யுத்தமனே
தருணந் தனையறி வித்தேனுன் பாரமென் சற்குருவே. (௰)

முருகர் திருப்பதிகம் முற்றுப்பெற்றது.

# சாற்றுக் கவிகள்.



சேற்றூர் சமஸ்தான வித்வான் ம-ா-ா-ஸ்ரீ இராமசாமிக்
பிராயரவர்க ளியற்றியது.

ர்வைநகர் வாழ்வுடையான் பழநிவே லப்பரபலன்
திருக்குமாரன்

வைர மணிமார்பன் காளியண்ண நாமவள்ளல்
சித்தத்தன்பாய்க்

ர்வைகுழல் வள்ளிமகிழ் கந்தனிரு கழல்போற்றிக்
கழறும்பாவாற்

ார்வைபுரி பதிகமதி ஞெருகவிகேட் டவர்க்குமுத்தி
கூடுந்தானே



ஷியார் குமாரர் சிவகாசி ம-ா-ா-ஸ்ரீ அருணசலக்கவிரா
ரவர்க ளியற்றியது.

ட்டியமின் ஞர்மலியுஞ் சேர்வைநகர்க் காளியண்ண
நரேந்த்ரன் மேலாம்

## சாற்றுக் கவிகள்.

பாட்டியல்தேர்ந் துளத்திலன் பாய்ப் பண்ணவர்வாழ்
வைச்சேனு பதியாய்ச் சென்று

மீட்டியநம் பெருங்கருணை வேலவன்றன் பாதமலர்
மிசையே மேவச்

சூட்டியவித் திருப்பதிகம் விருப்பதிகம் கொடுத்திடு நூல்
சொல்வல்லோர்க்கே



ஷெயார் கனிட்டர் உடுமலைப்பேட்டை ம-ா-ா-ஸ்ரீ எம். ஆர்
கந்தசாமிக் கவிராயரவர்க ளியற்றியது.

கலித்துறையெங் கணும்வீசிக் கரை கரைய வலைமோதுங்
கவினுலாமார்

கலித்துறை நேர் பெருந்தடஞ்சூழ் சேர்வைநகர்க்
காளியண்ண கனவான் சேர்கெக்

கலித்துறையும் பெருங்கருணைக் களஞ்சிய மாங்குகப்
பெருமான் கழல்மேற்சாத்துங்

கலித்துறைபத் தினிலொன்று யினுமறிந்தோர்
கலித்துறையைக் கடப்பர் மாதோ.

உடுமலைப்பேட்டை தமிழ்வித்வான் ம-ா-ா-ஸ்ரீ எஸ்.வெங்கடராயலுநாயுடு அவர்களா லியற்றப்பட்டது.

கட்டளைக்கலிப்பா.

பேர்வை யம்பதி னுன்கிறு மோங்கிடப்
பெற்றவன் பகையற்றவ னற்றவன்
பார்வை யம்பதின் மிக்கவ ருட்கவர்
பாங்கன்முத்தமிட் பாவல ராவலன்
சோர்வை யமபதி யாமனத் தானர
தங்கனுனங் காளியண் ணன்றிருச்
சேர்வை யம்பதி யான்கும ரன்புகழ்
செப்புமிப்பதி கத்தினை யின்றரோ.

பாலைக்காடு வித்துவான் ம-ா-ா-ஸ்ரீ நல்லதம்பிப் பிள்ளை யவர்க ளியற்றியது.

திருக்கு மரன்செவிக்கினிய கலித்துறை யாற்பதிகமொ
ன்றுசெப்பினுரெவ்
வுருக்குமொழும் வலியுடையான் சேர்வை நகர்காவல்புரி
யுயர்ந்தசீமான்
இருக்கெசுர்சாமங்களினுல எப்பரியசிவபெருமா
னெழிற்கொற்போதி
விருக்குமனச் சுரும்புடையான் காளியண்ண
னெனும் புலவரேந்தன்மாதோ

குமரமங்கலம் மா-அ-அ-ஸ்ரீ ப. ஆறுமுகம் பிள்ளையவர்க ளியற்றியது.

அனங்கனை மார்தடமடவி மிடைபுடைசூழ் சேர்வகசர்க்
கரசனெனுங்கோல்
அனங்கனைய பழனிவேற் பூபதபலராமிதருமமிசியன்
றேத
அனங்கனைக மாடைபல விரவலர்க் கிந்திசைபரவி
யவ்வனிவாழ்த்த
அனங்கனற் செந்தே னமிர்தக்கவி தைமொழி சாளியனன்
னவரசர்கோமான்
பத்துக் கந்தனைச் செகுத்தோன்பரிச தெனப்பாரதனிற்
பணித்திடற்கா
பத்துக் கந்தனையவித்தர் சமையகற் றிப்பத்திநெறி
புரவிநோங்க
முத்துக் கந்தனைத்துதிசெய் கவித்துறை நற்பதிகமிதம்
மொழிந்தார் தங்கள்
மூர்த்துக் கந்தனைத் தவிர்க்கு மென்னிலதன் பெருமைபெவர்
மொழிதற்பாற்றே.



...ண்டுச்சல் ம-า-า-ஸ்ரீ சே.து. விசாகப் பெருமாள் முதலி
...ரவர்க ளியற்றியது.

...ம்பந்த மாகவருபி றவிக்கடன் மேற்கடக்க
நம்பந்த மாசமுற் ரேணியைப் பெற்றிடு நற்குசற்குச்
சம்பந்த மாகணியென்னக் கவித்துறைத் தார்புனைந்தான்
வம்பந்த மார்கருணைக் காளியண்ண மகாதிடனே.

...ச்செங்கோடு விவேகதிவாகரன் பத்திராதிபர் ம-า-า-ஸ்ரீ
அ. முத்துசாமிக் கோனாரவர்க ளியற்றியது.

...ச்சைக் குலக்குறவர் கோதையையும் வேட்டகுசற்
கிச்சைகொடுபோப்பணி வேய்ந்தேத்திஞன்-மெச்சுமலர்
வாளியண் ணற்செற்றமலைமாதிடத்தோன் ருள்பணியும்
காளியண்ண னுள்ளங்களிந்து.

